உ

சண்முகன் துணை.

திரு விருதுநகர்

சண்முகக் கடவுள் மீது

# திருவிரட்டை மணி மாலை.



இஃது

விருதுநகர், ஸ்ரீமான்

பூ. மு. நாச்சியப்ப நாடாரவர்களால்

இயற்றப்பெற்றது.



உண்மை விளக்கம் பிரஸ்,

விருதுநகர்.

விலை] 1928. [அணா 2.

உ

சண்முகநாதன் துணை.

திருவிருதுநகர்,

சண்முகக் கடவுள் மீது

# திருவிரட்டை மணி மாலை

இஃது

மேற்படி நகரம்

ஸ்ரீமான்

பூ. மு. நாச்சியப்ப நாடார் அவர்களால்

இயற்றப்பெற்று

தமது

உண்மைவிளக்கம் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப் பெற்றது.

1927.

உ

# நூல் சிறப்பு.

தண்கடற் புவியில் பக்தர் உபாசனை சண்முகத்தெய்வ-மாய் அருள்பாலிக்கும் அப்பன் திருவருளைப் பாடிப் படித்துப் பரமானந்தமடையாத பக்தர் யாவர்? திருவிருதையம்பதியில் திருக்கோவில் கொண்டெழுந் தருளியிருக்கும் அப்பெருமான் மீது இந்நூலாசிரியர் "நாச்சியப்ப நாடார்" சுருங்கச்சொல்லல் என்னும் அழகில், சண்முகக் கடவுள் 'திருவிரட்டை மணி மாலை' யென்னும் இப்பாவை யிசைத்துளார். வெண்பாவுங் கலித்துறையு மிருபஃதந்தாதித் தொடையாய் வரவேண்டு மென்பது விதி. இரட்டை – இரண்டு (வகை) மணி – அழகு அல்லது ஒளி; மாலை கோர்க்கப்படுவது. அதாவது, இருவகை பாக்களிலான சொற்களால் அருள் ஒளி விளங்கும்படி கோர்க்-கப்பட்ட பாமாலை யென்பது பொருள். பாடல்களில் நூலாசிரியர் பக்தியும், குகப்பிரான் பெருமையும், திருவிருதையம் பதியின்சீரும் விளங்குகின்றன. பாடல்கள் அரும்பதங்களின்றி யிருத்தலால் யாரும் படித்தறியலாம். முன் சொல்லிய விதிப்-படி இருபாக்களோடு அகவற்பா ஒன்று சேர்த்து மும்மணிமாலை யென்று பெயர்புனைந்த நூலும் இயற்றியுளார்; வெளிவரும்.

ஆ. குமரய்ய நாடார்,

பெருநாழி.

உ

சண்முகநாதன் துணை.

—::—

# திருவிருதுநகர்,
# சண்முகக் கடவுள் மீது
# திருவிரட்டை மணிமாலை.



### விநாயகர்துதி—வெண்டா.

விண்மீதோர் போற்றும் விருதுநகர்ச் சண்முகன்மேல்
மண்மீ திரட்டைமணி மாலையினைப்—பண்புடனே
பாடிடவே தும்பிமுகன் பாதத் திருமலரை
நாடித் துதித்திடுவோம் நாம்.

---



## நூல்.

### வெண்பா.

தேடினேன் பாதந் திகழீசன் றன்சுதனே
நாடியெனை யாண்டிடுவாய் நற்குருவே—நீடியவான்
தேவர்க்கு மெட்டாது தித்திக்கு மாரமுதே
காவிருதூர்ச் சண்முகா கா.

### கட்டளைக் கலித்துறை

காடென்றுஞ் சுற்ற மனையென்று நாளுங் கருத்தழிந்து
நாடென் றிருக்கு மின்னதி லுன்னருள் நாடிவந்தேன்
கேடென்னு மாழி தோயா தெடுத்துநீ கிட்டரிய
வீடென்னு ஞான மருள்விரு தூர்வளர் வித்தகனே. (2

### வெண்பா.

வித்தகனே குஞ்சரியை வேடர்குலப் பூங்கொடியை
யித்தரையி லேமணந்த வேந்தலே—சுத்தசிதா
விண்ணே மணியே விருதூ ரெனும்பதியின்
கண்ணேசீர் தாசண்மு கா. (3

### கட்டளைக் கலித்துறை.

காலயன் போற்றிட வின்னருள் செய்திடுங் கற்பகமே
கோலச் சிகிமே லமர்ந்திடுந் தேவே குவலயத்தில்
பாலனு மென்னை யனுதினங் காத்தி பகரவொணு
வேலா திருவிரு தூர்வளர் சண்முக விண்மணியே. (4

### வெண்பா.

விண்ணோர்க்கு மெட்டா விமலப் பரஞ்சுடரே
மண்ணோர் தொழுந்தேவாய் வந்தருளுஞ்—சண்முகனே
ஆடகஞ்சேர் தென்விருதூ ரையா வுனதுபுகழ்
பாடகமாய் வைகப் பகர். (5

## கட்டளைக் கலித்துறை.

கரும்பான சொல்லுங் கயலான கண்ணுங் கவர்ந்திரங்கா
இரும்பான நெஞ்சு முளமாதர் தங்கள்பே ரிச்சையதில்
வருங்கால மெல்லா வெறுங்கால மாக்கியிவ் வாழ்வுகந்தேன்
சுருங்கா நிதிதா விருதூரில் வாழுஞ் சுடர்மணியே. (6

## வெண்பா.

சுடர்மணியே கற்பகமே துன்னியெழு பாச
இடர் கடந் தாரடையு மின்பக்—கடற்பரப்பே
செய்யா ளுறையுந் திருவிருதூர்ச் சண்முகனே
அய்யா வினிதருள்வா யன்பு.

## கட்டளைக் கலித்துறை.

அன்பர்க் கருளு மறுமுக ஞானமெய் யற்புதமே
உன்பதம் நாடி யுருகி யிராப்பக லோலமிட்டேன்
என்கதி கண்டு மயின்மீதில் வந்திங் கினிதருள்வாய்
பொன்விரு தூர்வளர் சண்முகக் காவல புங்கவனே. (8

## வெண்பா.

புங்கவரைக் காத்து வரும் பொல்லாரைப் போர்க்களமாம்
அங்கவரை வென்றருளுமற்புதனே—மங்களஞ்சேர் [நிதம்
தென்விருதூர்ச்சண்முகனே தீர்த்தருள்வாய் பொங்கி-
வன்மையுட னேதொடரு மால். (9

## கட்டளைக் கலித்துறை.

மாலான வுன்றன் மலர்ப்பத நாடி மனமுவந்து
பாலா மொழித்தமிழ் பாடினே னுய்யும் படியருள்வாய்
வேலா யுதங்கொண் டசுரேசர் முன்புசெல் விசாகனேவி
சாலா பலவளஞ் சார்விரு தூர்வளர் சண்முகனே. (11

## வெண்பா.

சண்முகனே யன்பர் சவிப்பகற்றி யேவிளங்குஞ்
சண்மணியே ஞானக் கடலமுதே—திண்ணசுரர்
வெய்யசமர்வென் றருளுமெய்ப்பொருளேயென் றனேக்கா
அய்யா விருதுநக ரா.

## கட்டளைக் கலித்துறை.

கங்கையுங் கொன்றையுந் தும்பையுஞ் சூடிக் கபாலமனல்
அங்கையி லேந்துவோன் றன்றிரு மைந்தா வலேயிலெழுஞ்
சங்கைப் பிடித்தோன் மருகா வெனதுளச் சங்கையைத்தீர்
பங்கய வாவி விருதூர் வளர்திருப் பாக்கியமே. (12

## வெண்பா.

பாக்கியமாய் வந்த பழம்பொருளே ஞானமய
வாக்கியங்கள் கும்பமுனி வற்களித்த—தேக்கியதண்
ணீர்த்துறைசேர்தென்விருதூர் நின்மலநின் சேவையினை
ஊர்த்துவமாய் நோக்கு முளம். (13

### கட்டளைக் கலித்துறை

உள்ளத்தில் நாளு முருக்கமாய்க் கொண்டே னுனதடியை
கள்ளத்தை நீக்கிக் கவற்சிசெய் பாசங் கடந்த வின்ப
வெள்ளத் திருந்திடச் செய்யன்ன தானம் விரும்பிவந்தோர்
கொள்ளத் தருவிரு தூர்வளர் சண்முகக் குஞ்சரமே. (14

### வெண்பா.

குஞ்சரத்தையன் றுரித்தோன் கோமகனே தீமையெனும்
வெஞ்சரத்தைப் போயறுக்கு வேலவனே—பஞ்சரத்தின்
பந்திப்பாங் கிள்ளை பயில்விருதூர்ச் சண்முகனே
சிந்திக்கு மென்றனுளந் தேர். (15

### கட்டளைக் கலித்துறை.

தேடினே னுன்றன் பாதார விந்த தெரிசனைக்கே
வாடினே னொந்தேன் மயங்கினேன் மாலே வளைந்திடலால்
பாடியதேற்று மெஞ் ஞானபோ கம்மெனும் பாக்கியமீய்
நீடிய நிதிய நல்விரு தூரமர் நின்மலனே. (16

### வெண்பா.

நின்மலமா யற்புதமாய் நீள்விசும்பிற் கற்பகக்காப்
பொன்மலரையேந்திவரும் பொற்கொடியின்-தனயனாய்
நாடி விருதுநகர் நல்லவர்கள் பாடுகவி
கோடி யினிதுகக்குங் குன்று. (17



## கட்டளைக் கலித்துறை

குன்றேயன் பார்க்கருளுங் கோதற்ற ஞானக் கொழுஞ்சுடரே
அன்றேதன் றந்தைக் கருமறை யோதிய வாசிரிய
இன்றென் வினையினை நீக்கி யிகபர வின்பமருள்
மன்றுார் விருதுார் வளர் திருச் சண்முக வான்பொருளே. (18



## வெண்பா.



வான்பொருளே யுன்னை வழிபட் டினிதடைந்த
நான்பொருளைக்கண்டிருக்க நல்லருள்செய்—தேன்கமழும்
சோலை விருதுநகர்த் தூயவனே யன்பருள
வாலயமே நிற்குநிலை யாம். (19

## கட்டளைக் கலித்துறை.

நிற்காணு ஞான நிகரிலாச் செல்வ நித்தியசுகம்
நற்கால மென்று மடியே னடைந்திட நாடியிங்கு
மற்காணு திண்சிறை மாமயில் மீதினில் வந்தருளி
தற்காக்க வேணுந் தென்விரு துார் வளர் சண்முகனே. (20

---

திருவிரட்டைமணி மாலை
முற்றுப்பெற்றது.